கௌரவ டாக்டர் பட்டம் பெற்ற விஞ்ஞானி Dr.ஆனந்த்குமார் | 24 மனையார் நடத்திய திருவிழாக்கள் | புகழ் மகுடம் ஏற்க மறுத்த ஞானியர்

ரூ. 10/- | ஏப்ரல் 2024 சித்திரை | தீபம்: 12 ஒளி: 4



# 24 மனை குலமுரசு

தமிழ் மாத இதழ்



## முத்திரை பதிக்கும் சித்திரை

# 24 மனை குலமுரசு

தமிழ் மாத இதழ்

RNI No: TNTAM/2013/48200

தீபம்: 12 ஒளி : 04

ஏப்ரல் 2024 சித்திரை

24 மனை தெலுங்கு செட்டியார்கள் இளமக்களுக்காக
24 மனை தெலுங்கு செட்டியார்கள் சேரிட்டபிள் டிரஸ்ட்
அறக்கட்டளையால் நடத்தப்படும் அரசியல் சார்பற்ற சமூக மாத இதழ்
24 மனை தெலுங்கு செட்டியார்கள் தலைமைச் சங்கம்
கீழ்ப்பாக்கம், சென்னை - 600010.



சிறப்பாசிரியர்:
**கரூர் கே.சி. பழனிசாமி**
Ex.M.P., Ex.MLA.,

ஆசிரியர்:
தமிழ்ச்செம்மல்
முனைவர் **துரை அங்குசாமி**
M.A.,B.L.S.,B.Ed.,Ph.D.,


**40 லட்சம் மக்களின் நாடித்துடிப்பு**
**24 மனை குலமுரசு மாத இதழ்**

## ஆண்டு சந்தா ரூ.300/- செலுத்தும் முறை

படத்திலுள்ள UPI QR Code-ஐ ஸ்கேன் செய்து அல்லது எங்களது வங்கிக் கணக்கில்

A/c Name :
24 MANAI KULAMURASU
Bank Name : CANARA BANK
Branch : CHENNAI KILPAK
A/c Number : 1650101014869
IFSC CODE : CNRB0001650

24 MANAI KULAMURASU
71358585014869@cnrb

ஆன்லைன் மூலம் ரூ.300/- செலுத்தி அதன் பரிவர்த்தனை விபர ஸ்கிரீன்ஷாட்-ஐ 9965 900 990 என்ற வாட்ஸ்அப் எண்ணிற்கு (அ) kulamurasuoffice@gmail.com என்ற மின்னஞ்சல் முகவரிக்கு உங்கள் முகவரி மற்றும் செல்போன் எண் குறிப்பிட்டு அனுப்பவும்.

கனரா வங்கியில் செலான் மூலம் பணமாக செலுத்துவோர் சந்தா ரூ.300+ வங்கி சேவைக் கட்டணம் ரூ.60 சேர்த்து ரூ.360/-ஐ கனரா வங்கிக் கணக்கில் செலுத்தி, கௌண்டர் ஃபைல் ரசீது நகலுடன் உங்கள் முகவரி எழுதி மின்னஞ்சல் (அ) வாட்ஸ்அப் (அ) தபாலில் அனுப்பவும்.


24 மனை குலமுரசு,
330/1, சின்னாண்டான் கோவில் வீதி,
கரூர் - 639001.
Customer Care Cell: 9965 900 990
E-Mail: kulamurasuoffice@gmail.com
K.C.S.R.சிவக்குமார் - Ph: 04324-240663


## 13ஆம் ஆண்டில் குலமுரசு

# முன்னோட்டம்



## விளம்பரக் கட்டண விபரம்

கலர் : முழுப்பக்கம் : ரூ. 5,000 (அளவு W:16cmXH: 21cm)
க/வெ : அரைப்பக்கம் : ரூ. 1,500 முழுப்பக்கம் : ரூ. 3,000

புதிய சந்தா பதிவு செய்தல், புதுப்பித்தல், முகவரி மாற்றம் மற்றும் மணக்கோலம் பகுதியில் சேர்க்க மற்றும் திருத்தம் செய்ய தொடர்பு கொள்ளவேண்டிய செல்பேசி / டெலிகிராம் / வாட்ஸ்ஆப் எண்:

**9965 900 990**

அழைப்பு நேரம்: காலை 10 மணி முதல் மாலை 6 மணி வரை

/24kulamurasu /@kulamurasu https://24manaikulamurasu.wordpress.com


இதழ் வடிவமைப்பு: N.ராஜேந்திரன், rajasmedia@gmail.com

Gujan's PARIPALANA RETIREMENT COMMUNITY

GUJAN'S

# PARIPALANA - PHASE II

**Retirement Community**

Sri Veeramathi Amman INFRA DEVELOPER PVT. LTD.

**Comfortable Homes for Retired living Near Vadavalli.**

**First Phase of 92 Units already functioning smoothly Since July 2017.**
**Second Phase of 1, 2, 3 BHK Flats under Construction near**
**Bharathiya Vidhya Bhavan School , Ajanoor Road, Vadavalli, Coimbatore.**



## * Bring back the Memories of Time gone by...

**Common Vegetarian Dining, Cultural & Religious Activities including Regular Music Concerts , Comprehensive Medical Care, Indoor Game Activities, Mini Gym for Seniors, Guest Rooms & Library.**

*** SERVICE PROVIDER- PARIPALANA CAFE**

For Booking Call :

87540 44116
87540 44881
81100 42393

No : 4, Gandhi Layout,
Maruthamalai Main Road,
Coimbatore - 46.

svaconstructions@yahoo.co.in
srigujanbuilder@gmail.com

www.gujanparipalanaseniorliving.com

TN/11/BUILDING/0045/2019
Dated on 29.03.2019

RERA APPROVED

# முத்திரை பதிக்கும் சித்திரை



சித்திரை, தமிழ் புத்தாண்டின் ஆரம்ப மாதம். "சித்திரா" என்னும் சொல் பிரகாசத்தையும் வெளிச்சத்தையும் குறிக்கும் சொல்லாகும். புத்தாண்டின் ஆரம்பத்தையும் ஒளிர வைக்கும் பிரகாசமான மாதமே சித்திரை.

பனி குறைந்து வெயில் வரத் தொடங்கும் பொழுது வசந்தத்தின் ஆரம்பமாக மல்லிகை மணக்கும். மாமரம் பலன்களைக் கொடுக்கும். வெள்ளரிக்காய் தாகம் தீர்க்கும். கிரினி, தர்பூசணி போன்ற பல கனிகள் நமைக் குளிர வைக்கும். நோய் தீர்க்கும் வேப்பம் பூக்கள் இம்மாதத்தில் மட்டுமே கிடைக்கும்.

வடநாட்டில் சித்திரை வருடப்பிறப்பை வைசாகி என்றும், மேஷ சங்கராந்தி என்றும் குறிப்பிடுவர்.

சூரியன் மேஷ ராசியில் பிரவேசிக்கும் நாளே சித்திரை முதல் நாள் ஆகும்.

சித்திரை மாத்தின் முதல் நாள்தான் பூமியை பிரம்மா படைத்ததாக புராணம் சொல்கிறது.

சித்திரை முதல் நாளன்று கேரளாவில் கோவில்களில் பக்தர்களுக்கு ஒரு ரூபாய் நாணம் வழங்குவார்கள். இதற்கு கை நீட்டம் என்று பெயர்.

### சித்திரை பௌர்ணமி

இந்த மாதத்தில் வரக்கூடிய ‘சித்ரா பௌர்ணமி’ மிக விசேஷமானது. இந்த சித்ரா பௌர்ணமி அன்று நிலவின் முழு வெளிச்சத்தால் பூமியின் சில பகுதியில் ஒரு வகை உப்பு வெளிவரும், அது பூமி நாதம் என சித்தர்கள் அழைப்பார்கள். இது மருத்துவ துறையில் இன்றும் பயன்படுத்தப்படுகிறது.

### அட்சய திருதியை

எதை செய்தாலும் பல மடங்கு பலன் பெறக் கூடிய நாளாக அட்சய திருதியை பார்க்கப்படுகிறது. இந்த பொன்னான நாள் சித்திரை மாதத்தில் தான் வருகிறது.

நாம் இந்த அட்சய திருதியை நாளில் செய்யக் கூடிய தான தர்மங்கள், பித்ருக்களுக்கு நாம் செய்யும் தர்ப்பணம் உள்ளிட்டவை நமக்கு பல மடங்கு பலனை தர வல்லது.

இந்த தினத்தில் அரிசி, கோதுமை, தானியங்கள். பழங்கள். தயிர், மோர், ஆடைகள்

உள்ளிட்டவற்றை ஏழைகளுக்கு தானம் செய்வதால் நமக்கு மன அமைதியும், செல்வமும் பெருகும்.

மீனாட்சி திருக்கல்யாணத்தை நேரில் பார்த்து தரித்தால் களத்திர தோஷ பாவமும், நாகதோஷங்களும் விலகும்.

மீனாட்சி திருக்கல்யாணத்தை ஒருவர் தொடர்ந்து 12 ஆண்டுகள் கண்டால், அவரது தலைமுறைக்கே தோஷ நிவர்த்தி கிடைத்து விடும்.

சித்திரை மாதம் மதுரை மீனாட்சி அம்மன் கோவிலில் நடக்கும் தேர் திருவிழாவில் கலந்து கொண்டு வடம் பிடித்து இழுத்தால் வழக்குகளில் வெற்றி உண்டாகும்.

சிலப்பதிகாரத்தில் பூம்புகாரில் இந்திர விழா, சித்ராபவுர்ணமி அன்று நடந்ததாக குறிப்பிடப்பட்டுள்ளது.

சித்திரை மாதத்தில் தாகத்தில் இருப்பவர்களுக்கு மோர் குடிக்கக் கொடுத்தால் ஜென்மாந்திர பாவங்கள் விலகும். சர்க்கரை கலந்து பானகம் குடிக்கக் கொடுத்தால் வைகுண்ட வாசம் கிடைக்கும் என்று புராணம் சொல்கிறது.

எமதர்மனின் கணக்காரன சித்ர குப்தன் தோன்றியது சித்திரை மாத பௌர்ணமி நாளில்தான். அதே மாதத்தில், சித்திரை நட்சத்திர தினத்தன்று தான் நீலாதேவி மற்றும் கர்ணிகாம்பா ஆகியோரை சித்ரகுப்தன் மணந்ததாகப் புராணம் சொல்கிறது.

ஸ்ரீரங்கத்தில் கஜேந்திர மோட்ச விழா சித்திரை மாதத்தில் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

## உலகெங்கும் சித்திரை

சித்திரைத் திருநாளான ஏப்ரல் 14 தமிழ்நாட்டில் மட்டுமல்லாமல் இந்தியாவின் பல மாநிலங்களிலும் உலகின் சில நாடுகளிலும் முக்கியத்துவம் வாய்ந்த நாளாக உள்ளது.

### விஷு, கேரளம்

உழவர்களுக்கான நாள் இது (ஏப்ரல் 14). கேரளத்தில் உழவுக்கான ஆயத்தப் பணிகள் இந்நாளில்தான் தொடங்கப்படும். கனிகாணல், விஷு கைநீட்டம், விஷு படக்கம் (பட்டாசு வெடித்தல்) போன்றவை இந்தக் கொண்டாட்டத்தின் முக்கிய நிகழ்வுகள். விஷு கைநீட்டம் என்பது வீட்டின் பெரியவர்கள் சிறுவர்களுக்கும் தம்மிடம் வேலை செய்வோருக்கும் வழங்கும் பண அன்பளிப்பு.

### ரோங்காலி பிஹு, அசாம்

அசாம் மாநிலத்தில் பிஹு என்கிற அறுவடைத் திருவிழா ஆண்டில் மூன்று முறை கொண்டாடப்படுகிறது. இவற்றில் ரோங்காலி பிஹு (ஏப்ரல் 14 –15) முக்கியமானது. இந்நாளில்தான் நெல் பயிரிடுவதற்கு, விவசாயிகள் வயல்களைத் தயார் செய்கின்றனர். பசுக்களை அலங்கரித்து வணங்குவது வாடிக்கை.

### வைசாகி, பஞ்சாப்

நாம் கொண்டாடும் பொங்கல் பண்டிகையைப் போன்றதே பஞ்சாபில் உள்ள சீக்கியர்கள் கொண்டாடும் ‘வைசாகி’ பண்டிகை (ஏப்ரல் 14). பஞ்சாபில் இளவேனில் அறுவடை நாளின் ஆரம்பத்தையும் குறிக்கும் நாள் இது.

### மேற்கு வங்கம்

வங்காளிகள் அறுவடையைப் போற்றி மகிழும் நாள் இது (ஏப்ரல் 14).

### சோங்க்ரான், தாய்லாந்து

தாய்லாந்தில் மக்கள் தண்ணீரைப் பீய்ச்சியடித்து மகிழும் திருவிழா இது (ஏப்ரல் 13 –15). பௌத்தப் புத்தாண்டின் தொடக்கத்தைக் குறிக்கும்.

# வலையபட்டி ஸ்ரீ பெரிய அங்காள பரமேஸ்வரி அம்மன் திருக்கோயில் மஹா சிவராத்திரி விழா

24 மனை தெலுங்கு செட்டியார் கெந்தவங்குருவர் மற்றும் தவலையர் குலதெய்வமான ஒட்டன்சத்திரம் தாலுகா வலையபட்டி கடவுர் ஜமீன் தென்னிலை நத்தமேடு பாண்டியன் பொய்கையில் குடிகொண்டிருக்கும் ஸ்ரீ பெரிய அங்காளபரமேஸ்வரி அம்மன் மாசி மஹா சிவராத்திரி உற்சவத் திருவிழா கடந்த 08–03–2024 முதல் 10–03–2024 வரை நடைபெற்றது.

08–03–2024 வெள்ளிக்கிழமை மதியம் பாண்டியன் பொய்கையில் சிறப்பு அபிஷேக பூஜை நடைபெற்றது. வலையபட்டியில் பின்னிரவு 3 மணியளவில் பச்சைப்பயிர் பள்ளய பூஜை, பெரிய பூஜை நடைபெற்றது. மறுநாள் 09–03–2024 சனிக்கிழமையன்று காலை பொங்கல், மாவிளக்கு வைத்தல், முடி இறக்குதல், காது குத்துதல் மற்றும் சிறப்பு பூஜைகள் நடைபெற்றன.

10–03–2024 ஞாயிற்றுக்கிழமை ஸ்ரீ அங்காளபரமேஸ்வரி அம்மன் மாலை 5 மணியளவில் பல்லக்கில் அலங்காரம் செய்து ஊர்வலமாக இடையகோட்டை ஜமீன் அரண்மனை சென்று சிறப்பு பூஜை செய்யப்பட்டது. தொடர்ந்து இடையகோட்டை, வலையபட்டி நகர் ஊர்வலமாக



வந்து திருக்கோவிலை அடைந்தனர். மஞ்சள் நீராட்டு விழா சிறப்பாக நடைபெற்றது.

விழா நடைபெற்ற மூன்று நாட்களும் பொது அன்னதானம் நடைபெற்றது. விழா ஏற்பாடுகளை விழாக்குழுவினர் சிறப்பாகச் செய்திருந்தனர்.

*செய்தித் தொகுப்பு: S.சிவனேஸ்வரன், குலமுரசு நிருபர், பார்டர் தோட்டம், சென்னை.*




## விளம்பரக் கட்டண விபரம்

**கலர்** (அளவு Width 16cm X Height 21 cm)

முழுப்பக்கம் : ரூ. 5,000

**கறுப்பு - வெள்ளை:**

அரைப்பக்கம் : ரூ. 1,500

முழுப்பக்கம் : ரூ. 3,000

உங்கள் இல்ல விழா நிகழ்ச்சிகள், வரன் தேவை விளம்பரங்கள், வர்த்தக விளம்பரங்கள், கண்ணீர் அஞ்சலி, நினைவஞ்சலி விளம்பரங்களை குலமுரசில் வெளியிட்டு பயன்பெறுங்கள்.

மேலும் விபரம் அறிய அழைக்கவும்:

**9965 900 990**



# விஞ்ஞானி டாக்டர். கே.ஆனந்த்குமார் (16 வீடு மும்முடியர் குலம்) அவர்களுக்கு கௌரவ டாக்டர் பட்டம் (D.Sc)

உலகப் புகழ்பெற்ற விஞ்ஞானியான டாக்டர் கே.ஆனந்த் குமார் (16 வீடு மும்முடியர் குலம்) அவர்களுக்கு சவிதா மருத்துவம் மற்றும் தொழில்நுட்ப அறிவியல் நிறுவனத்தின் 22வது பட்டமளிப்பு விழாவில் மிக உயரிய விருதான கௌரவ டாக்டர் பட்டம் (D.Sc.,) வழங்கி கௌரவிக்கப்பட்டுள்ளது.

டாக்டர் கே.ஆனந்த் குமார் அறிவியல் துறையில் ஆற்றிய முன்மாதிரியான பங்களிப்புகளையும் சாதனைகளையும் அங்கீகரிப்பதற்காக கௌரவ டாக்டர் பட்டம் வழங்கப்பட்டது.

இவருடன் கௌரவ டாக்டர் பட்டம் பெற்றவர்கள் 1.பத்மஸ்ரீ டாக்டர் பல்ராம் பார்கவா – இந்திய அரசின் ICMR நிறுவன முன்னாள் டைரக்டர் ஜெனரல், 2. டாக்டர் சேகர் C.மன்டே – இந்திய அரசு தொழில் மற்றும் ஆராய்ச்சி நிறுவனத்தின் முன்னாள் செயலர், 3. டாக்டர்



ராகேஷ் அகர்வால் – பாண்டிச்சேரி ஜிப்மர் மருத்துவ ஆராய்ச்சி நிறுவனத்தின் இயக்குநர் உள்ளிட்ட மூன்று மாபெரும் அறிஞர் பெருமக்களுக்கும் வழங்கப்பட்டது.

டாக்டர் குமாரின் தொலைநோக்கு தலைமையானது எண்ணற்ற முக்கிய மனித மற்றும் விலங்குகளுக்கான தடுப்பூசிகளை உருவாக்க வழிவகுத்துள்ளது. இந்த முக்கியமான துறையில் நமது நாட்டின் தன்னிறைவை மேம்படுத்துதல், மருத்துவ ஆராய்ச்சி மற்றும் கண்டுபிடிப்புகளை முன்னேற்றமடையச் செய்வதற்காக அர்ப்பணிப்புடன் செயலாற்றி வரும் அவருக்கு இந்திய மற்றும் உலகளாவிய வாழ்வியல் சார்ந்த அறிவியல் சமூகத்தில் பரவலான பாராட்டைப் பெற்றுத் தந்துள்ளது.

அவரது தலைமையில் உருவாக்கப்பட்ட தடுப்பூசிகள் நம் நாட்டிற்கு கட்டுப்படியாகக்கூடிய விலையை உறுதி செய்துள்ளன, மேலும் பல லட்சக்கணக்கான



உயிர்களைக் காப்பாற்றும் அதே வேளையில் அரசாங்கத்திற்கும் பொதுமக்களுக்கும் பல நூறு கோடி ரூபாய்களை மிச்சப்படுத்தியுள்ளன.

கொரோனா பேரிடர் காலத்தில், அவர் IIL நிறுவனத்தில் தனது குழுவை திறம்பட வழிநடத்தி, நாட்டில் கோவிட்19 தடுப்பூசித் திறனை அதிகரிக்க, குறுகிய காலத்தில் 20 மில்லியன் டோஸ்களை தயாரித்து வழங்கி சாதனை படைத்துள்ளார். இந்த உயிர் காக்கும் முயற்சி நமது இந்திய அரசால் சிறப்பாக பாராட்டப்பட்டது.

டாக்டர்.கே.ஆனந்த்குமார் நுண்ணுயிரியலில் முனைவர் பட்டம் பெற்றவர். தடுப்பூசி மற்றும் உயிரி தொழில்நுட்பத் தொழில்களில் 30 ஆண்டுகளுக்கும் மேலான அனுபவம் பெற்றவர். ஆஸ்திரேலியாவில் உள்ள ஃபைசர் குளோபல் உற்பத்தி மற்றும் நியூசிலாந்தில் ஷெரிங் ப்ளோ போன்ற நிறுவனங்களில் இந்தியாவுக்கு வெளியே பத்தாண்டுகளுக்கும் மேலாக பணியாற்றியுள்ளார்.



ICMR நிறுவனத்தில் பெருமைமிகு ஆராய்ச்சி மேற்கொண்டதற்காக சிறந்த முன்னாள் மாணவர் விருது மற்றும் PSG சன்ஸ் மற்றும் தொண்டு நிறுவனங்களின்'' சிறப்புமிக்க முன்னாள் மாணவர் விருது மற்றும் ரோட்டரி இன்டர்நேஷனலின் ''தொழில்சார் சிறப்பு விருது'' உள்ளிட்ட பல விருதுகளைப் பெற்றுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

இத்தகைய உயரிய கௌரவ டாக்டர் பட்டம் பெற்ற டாக்டர் கே.ஆனந்த் குமார் நமது 24 மனை இனத்தைச் சேர்ந்தவர் என்பதில் நாம் பெருமை கொள்கிறோம்.

# கிருஷ்ணா... நீதான் வேண்டும்

## குருஜி வாசுதேவ்

இயற்கை ஒரு சக்கர வட்டத்தில் சுற்றி வருகிறது. அதன் படைப்பில் எதுவும் வீணாவதே இல்லை. ஈக்களை தவளை உண்ணும். தவளையை பாம்பு சாப்பிடும். பாம்பு கருடனுக்கு இரையாகும்.

மரங்களின் காய் கனிகளை மனிதன் சாப்பிடுகிறான். மனித உடலை மண்ணிலுள்ள நுண்ணுயிர்கள் உண்கின்றன. மக்கிய உடல் உரமாகி தாவரங்களால் அவை உறிஞ்சப்படுகின்றன.

இந்த சக்கரத்தில் ஒவ்வொன்றும், ஒவ்வொரு வகையில் யாருக்காவது பயனாகின்றது. ஒன்றிற்கு அமுதமாக இருப்பது இன்னொன்றுக்கு விஷமாகிறது.

தேர்ந்த ஞானிகள் அனைவருக்கும் உதவுவர் எவரும் வீணாகப் போகக் கூடாது என்பதால் அனைத்தையும் காக்க முன் வருவர் எப்பொருளும் வீணாகக் கூடாது என்பதால் அவர்கள் தங்களது சுவடுகளைக் கூட விட்டுச் செல்ல விரும்புவதில்லை.

பாண்டவர்க்கும், கௌரவர்களுக்கும் போர் நிச்சயமாகி விட்டது. துவாரகை அதிபதியான கிருஷ்ணனின் துணையை நாடி துரியோதனன், அருச்சுனன் இருவருமே வருகின்றனர். உரிமையுள்ள அத்தையின் மக்களாயிற்றே. அதனால் நேராகப் படுக்கையறைக்கே செல்கின்றனர்.

அர்ஜுனன் கிருஷ்ணரின் கால் மாட்டிலும், துரியோதனன் அவரது தலைமாட்டிலும் அமர்கின்றனர். கண் விழித்து கிருஷ்ணன் முதலில் அர்ஜுனனைத்தான் காண்கிறார். பிறகு துரியோதனனையும் பார்க்கிறார்.

"என்னைத்தான் முதலில் பார்த்தீர்கள்" என்கிறான்



# அருளுரை

அர்ஜுனன். "நான்தான் முதலில் வந்தேன்" என்கிறான் துரியோதனன்.

கிருஷ்ணர் கூறுகிறார், "துரியோதனா! அர்ஜுனா! நீங்கள் இருவருமே எனக்கு வேண்டியவர்கள்தான். உங்கள் இருவரில் யாராவது ஒருவர் பக்கம்தான் நான் இருப்பேன். ஆனால் அவர்களுக்காக ஆயுதம் ஏந்த மாட்டேன். போராட மாட்டேன். மற்றொரு பக்கம் என் மாபெரும் நாராயணப் படை இருக்கும். உங்களுக்கு எது தேவை? என்



படைகளும், அவர்களின் ஆயுதங்களுமா? அல்லது ஆயுதம் ஏந்தாத நானா? எது வேண்டும்?"

"உங்கள் படைகளை அவர்களது ஆயுதங்களுடன் போராட என் பக்கம் அனுப்புங்கள்" என்றான் துரியோதனன்.

"கிருஷ்ணா! நீ என்னோடிரு அதுபோதும் எனக்கு" என்றான் அர்ஜுனன்.

யுத்தத்தின் முடிவு என்னவாயிற்று? ஆனானப்பட்ட பீஷ்ம, துரோண, கர்ணர்களை வென்று புறங்கண்டது பாண்டவ சேனை.

மக்கள் கூட்டம் மகத்தான செல்வம் இவற்றுக்கு மயங்காதவன் ஞானி என்கிறார் லா வோர் ஸூ. துவாரகையின் யாதவர் படையும், தளவாடங்களும் துரியோதனனை மயக்கின. போரிடாத கிருஷ்ணர் எதற்கு? அவருடைய படைகள் போதும் போரில் வெற்றி வாகை சூட என்றெண்ணினான் அவன். அர்ஜுனன் இதற்கெல்லாம் மயங்கவில்லை. வெறுமனே இருந்தாலும் கிருஷ்ணர் கடவுள். தர்மம் இருக்குமிடத்தில் தான் அவர் இருப்பார். அவர் இருக்குமிடத்தில் வெற்றி இருக்கும் என்று அவன் நம்பினான்.

ஞானி லா வோத் ஸூ தெள்ளத் தெளிவாகக் கூறுகிறார். மக்கள் கூட்டமோ, மகத்தான செல்வமோ, இவற்றுக்கு மயங்கி பாதை மாறாதவன் ஞானிதான் என்று.

மக்கள் கூட்டம் மகத்தான பொருட்கள் இவையனைத்தும் படைக்கப்பட்டவை. படைத்தவன் இவற்றையெல்லாம் விட மேலானவன். கண்ணுக்குப் புலப்படாத தர்மமே போரிடாத கிருஷ்ணர் போன்றது. உன் படைகளும், ஆயுதங்களும் போதும் என்ற துரியோதனனைப் போல் மக்கள் கூட்டத்தின் பின்னால், பொருட்களின் பின்னால் பெரும்பாலானவர்கள் செல்கின்றனர். ஒரு சிலர் மட்டுமே இவற்றில் மயங்காமல் சாசுவத தர்மத்தை, நீடித்த கொள்கைகளைப் பின்பற்றுகின்றனர்.

வாழ்க்கை என்ற மாபெரும் போரில் மக்கள் கூட்டமும், பொருட்களும் போதும் என்பவர்கள் தோற்று காணாமல் போகின்றனர். உறுதியுடன் கண்ணுக்குப் புலப்படாத தர்மத்தை, கொள்கைகளை அதாவது ஆயுதம் ஏந்தாத, போரிடாத கிருஷ்ணரைப் பற்றியவர்கள்தான் இறுதியில் வெற்றி என்ற இலக்கை எட்டி தங்கள் பெயரை வரலாற்றில் அழியாமல் பொறிக்கின்றனர்.

# ஈரோடு 24 மனையார் சார்பில் தீர்த்தம் மற்றும் புஷ்ப பல்லாக்கு திருவிழா



ஈரோடு 24 மனை தெலுங்கு செட்டியார்களின் சமூக சங்கத்தின் சார்பில் பிரசித்தி பெற்ற அருள்மிகு பெரிய மாரியம்மன், சின்ன மாரியம்மன், வாய்க்கால் மாரியம்மன் பண்டிகையை முன்னிட்டு 19ஆம் ஆண்டு தீர்த்தம் மற்றும் புஷ்ப பல்லாக்கு திருவிழா மிகச் சிறப்பாக நடைபெற்றது.

31.03.2024 ஞாயிற்றுக்கிழமை அன்று ஈரோடு 24 மனை தெலுங்கு செட்டியார் சமூகத்தாரால் காரைவாய்க்கால் மாரியம்மன் கோவிலில் இருந்து அதிகாலை 4.00 மணிக்கு தீர்த்தம் எடுத்து வந்து பெரிய மாரியம்மன், சின்ன மாரியம்மன், வாய்க்கால் மாரியம்மன் ஆகிய மூன்று மாரியம்மன் கோவில்களுக்கும் தீர்த்தம் அபிஷேகம் செய்யப்பட்டது. அன்று மதியம் அக்ரஹாரம் வீதியிலுள்ள பாலாம்பிகை மஹாலில் பகல் 12.00 மணி அளவில் மிகப்பிரமாண்டமாக அன்னதானம் நடைபெற்றது.

05.04.2024 வெள்ளிக்கிழமை அன்று மூன்று அம்மனுக்கும் அபிஷேக ஆராதனை செய்யப்பட்டு இரவு 8.00 மணிக்கு நமது சமூக கட்டளைப்படி அம்மனுக்கு சிறப்பு பூ அலங்காரம் மற்றும் நகைகளை கொண்டு அலங்காரம் செய்யப்பட்டு புஷ்ப பல்லக்கில் சுவாமி திருவீதி உலா மேளதாளங்கள் முழங்க மிகவும் விமரிசையாக நடைபெற்றது.

நமது இன மக்கள் பல்வேறு கடவுள்களின் திருஉருவங்களை தங்கள் உடம்புகளில் வரைந்து கொண்டு வண்டியில் அமர்ந்து அனைவருக்கும் காட்சி கொடுத்தனர்.

இந்நிகழ்ச்சியில் நமது இன மக்கள் மற்றும் பொதுமக்கள் ஆயிரக்கணக்கானோர் கலந்து கொண்டு விழாவை கண்டுகளித்தனர். முன்னதாக சமூகத்தின் சார்பில் அம்மனுக்கு பால்குடம் மற்றும் அக்னி கபாலம் எடுக்கப்பட்டது.



நிகழ்ச்சிக்கான ஏற்பாடுகள் ஈரோடு 24 மனை தெலுங்கு செட்டியார்களின் சமூக சங்கத்தின் சார்பில் சிறப்பாக செய்யப்பட்டிருந்தது.

– செய்தித் தொகுப்பு: அ.சுரேஷ், குலமுரசு நிருபர், பள்ளிபாளையம்.



# சென்னை பார்டர் தோட்டம் 24 மனையாரின் 62ஆம் ஆண்டு பழனி முருகன் தீர்த்தக் காவடி விழா

சென்னை பார்டர் தோட்டம் 24 மனை தெலுங்கு செட்டியார்கள் பழனி முருகன் தீர்த்தக் காவடி 62ஆம் ஆண்டு விழா உலக நன்மைக்காகவும், அமைதி வேண்டியும் மற்றும் நமது இனமக்கள் நலனக்காகவும் சென்னை ஸ்ரீ காமாட்சி அம்மன் அறக்கட்டளை வளாகத்தில் 18–03–2024 திங்கள்கிழமையன்று பங்குனி உத்திரக் கொடியேற்றத்துடன் ஆரம்பமானது.

அன்றைய தினம் பூஜை காவடிகளுக்கு அபிஷேக, ஆராதனைகளும், மெய்யார் பூஜையும் நடைபெற்றது. அன்று மதியம் பிரசாதம் மற்றும் அறுசுவையுடன் அன்னதானம் பரிமாறப்பட்டது.

22–03–2024 வெள்ளிக்கிழமையன்று சென்னை அருள்மிகு திருவேட்டீஸ்வரர் திருக்கோயிலில் இருந்து விநாயகர் தீர்த்தம் எடுத்துவந்து பார்டர் தோட்டம் அருள்மிகு சாலை விநாயகர் திருக்கோயிலில் செலுத்தப்பட்டது.

23–03–2024 சனிக்கிழமையன்று கொடுமுடியில் தீர்த்தம் முத்தரிக்கப்பட்டது. 24–03–2024 ஞாயிற்றுக்கிழமையன்று காவடிகள் பழனியை அடைந்தன. 25–03–2024 திங்கட்கிழமையன்று பழனிமலை முருகனுக்கு தீர்த்தக் காவடிகள் செலுத்தப்பட்டன. அன்று மதியம் பொது மெய்யார் பூஜையும் அதனைத் தொடர்ந்து அறுசுவை உணவும் வழங்கப்பட்டது.

அன்றைய தினம் நமது சமுதாய மாத இதழான 24 மனை குலமுரசு ஆசிரியர் முனைவர் துரைஅங்குசாமி அவர்களும், ஒட்டன்சத்திரம் போலீஸ் சூப்பிரெண்டண்ட் சென்னை திரு. K.முருகேசன் ஆகியோர் சிறப்பு விருந்தினர்களாக வருகை தந்து விழாவில் கலந்து கொண்டனர்.

26–03–2024 அன்று அபிஷேகப் பிரசாதங்கள் வழங்கப்பட்டு விழா நிறைவு பெற்றது. விழா ஏற்பாடுகளை காவடிக்குழுத் தலைவர் P.சண்முகம் செட்டியார், நிர்வாகி N.பழனிச்சாமி செட்டியார், பூஜை காவடி P.K.M. சிவா, முருகன் காவடி V.கோவிந்தன் செட்டியார் உள்ளிட்ட நம் இனமக்கள் சிறப்பாகச் செய்திருந்தனர்.

பார்டர் தோட்டம் 24 மனை தெலுங்கு செட்டியார்கள் பழனி முருகன் டிரஸ்ட் திருமண மண்டபத்திற்கு நிர்வாகிகள் தலைவராக V.V.R.வெங்கடாசலம் செட்டியார், செயலாளராக P.சண்முகம் செட்டியார், பொருளாளராக N.பழனிச்சாமி செட்டியார் ஆகியோர் 2வது ஆண்டாக சிறப்பாகச் செயல்பட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

*செய்தித் தொகுப்பு: S.சிவனேஸ்வரன், குலமுரசு நிருபர், பார்டர் தோட்டம், சென்னை.*



# புகழ் மகுடம் ஏற்க

புகழ்ச்சியால் மனிதமனம் மகிழ்ச்சியடைவதும், முகத்தில் மலர்ச்சி ததும்புவதும் இயற்கை. ஒருவரிடம் உள்ள சிறப்புகளை பேச்சால், எழுத்தால் விரித்துரைப்பதைப் புகழ்ச்சி என்கிறோம். இந்தப் புகழ்ச்சிக்கு மயங்கும் அரசியல் தலைவர்கள், ஆன்மஞானிகள், விஞ்ஞானிகள் என்ற பட்டியல் மிகப்பெரியது. புகழ்ச்சிக்கு அடிமையாகாத என்றும் தன்னிலை உணர்ந்து வாழும் மனிதர்கள் மிகக்குறைவு. அத்தகைய புகழை வெறுத்த தவஞானிகள் இருவரை 19ஆம் நூற்றாண்டு தமிழகம் கண்டுள்ளது.

வாரியார் சுவாமிகள் மகாப் பெரியவா இருவரும் புகழ்ச்சியை மறுத்துரைத்த மாபெரும் தவ ஞானிகள். இருவர் வாழ்விலும் நிகழ்ந்த இரு சம்பவங்களை இங்கே காண்போம்.

வாரியார் சுவாமிகள் சேலத்தில் ஒரு நூல் வெளியீட்டு விழாவில் உரையாற்ற இசைவு தெரிவித்திருந்தார்.

வாரியார் சுவாமிகள் பல இடங்களில் பேசிய பேச்சுக்களை எழுத்து வடிவத்தில் நூலாக்கம் செய்து வெளியீடு செய்கிறோம் என்று அவரிடம் சொல்லி அனுமதி வாங்கியிருந்தார்கள்.



வெளியீட்டு விழாவுக்காக சுவாமிகள் சேலம் வந்தவுடன் வெளியீடு செய்ய உள்ள அந்த நூலை தான் பார்க்க விரும்புவதாகச் சொன்னார். விழா ஏற்பாட்டாளர் நூலை சுவாமிகளிடம் கொண்டு வந்து வணங்கித் தந்தார்.

தமிழ்ச்செம்மல்
முனைவர் துரை அங்குசாமி

நூலின் தலைப்பைப் பார்த்தவுடன் சுவாமிகளுக்கு எல்லையற்ற கோபம் வந்துவிட்டது.

சினத்தின் உச்சத்திற்கே சென்று விட்டார். நூலின் தலைப்பு "64வது நாயன்மார் வாரியார் சுவாமிகள்" என்பதாகும்.

சைவ சமயத்திற்கு அருந்தொண்டாற்றிய 63 நாயன்மார்களுடன் அதே போன்று தொண்டாற்றி வரும் வாரியார் சுவாமிகளை 64வது நாயன்மார் என்று புகழ்ந்து எழுதியிருந்தார் அதன் ஆசிரியர்.

வாரியார் சுவாமிகள் கோபத்துடன் சொன்னார், "63 நாயன்மார்கள் ஆற்றிய திருத்தொண்டின் மகிமை என்ன? அவர்களுடன் சாமான்ய மானிடனான என்னை இணைத்துப் பேசுவதா? நெஞ்சம் பதறுகிறது என்று கூறிவிட்டு



# மறுத்த ஞானியர்

இந்த நூல் எத்தனை பிரதிகள் அச்சிட்டுள்ளீர்கள் எனக் கேட்டார்.

இப்போதைக்கு 100 பிரதிகள் அச்சிட்டுள்ளோம் என்று பதில் தந்தனர்.

யாருக்காவது இதில் ஏதாவது பிரதிகளை தந்துள்ளீர்களா என்று கேட்டார். சுவாமி நீங்கள் வெளியீடு செய்த பின்னர்தான் தருவது என்ற முடிவில் இருக்கிறோம் என்றார்.

அப்போ அந்த 100 பிரதிகளையும் இங்கே கொண்டு வாங்க என்று கூறி அந்த 100 பிரதிகளையும் தீவைத்து கொளுத்துங்கள் என்று கூறிவிட்டார். 100 பிரதிகளும் எரிக்கப்பட்ட பின்னர்தான் வாரியார் சுவாமிகள் அமைதியானார்.

தனக்கு சூட்டப்பட்ட புகழ் மகுடத்தை தவிர்த்த பெருந்தகை வாரியார் சுவாமிகள்.

இதே போல ஒரு நிகழ்ச்சி மகாப்பெரியவா வாழ்விலும் நடைபெற்றது. கல்கி பத்திரிகையில் காஞ்சிபுரம் ஸ்ரீ மடத்தைப் பற்றி எழுதுவதாகக் கூறி மகா சுவாமிகளிடம் உத்தரவு வாங்கியிருந்தார்கள்.

கல்கியில் தொடர் கட்டுரையாக வெளிவரும் எனக்கூறி முதல் மாதக் கட்டுரை வெளிவந்தது. அதில் மகாசுவாமிகளின் அற்புத அருளாற்றலைச் சித்தரித்து எழுதப்பட்டிருந்தது. நாடெங்கும் இந்தக் கட்டுரைக்கு பெரிய வரவேற்பு கிடைத்தது. மக்கள் அடுத்த மாதக் கட்டுரையைப் படிக்க அடுத்த இதழை எதிர்பார்க்கத் தொடங்கிவிட்டனர்.

இந்தச் சூழலில் மகாசுவாமிகள் இந்தக் கட்டுரையைப் படித்திருக்கிறார். படித்தவுடன் இந்த தொடர்கட்டுரையை நிறுத்தி விடும்படி கூறிவிட்டார்.

அவர் சொன்ன பதில் ‘‘ஸ்ரீ மடத்தைப் பற்றிய கட்டுரை எனில் அத்வைதம், ஆதிசங்கரர், காமாட்சி அம்பாள் என்ற செய்திகளைத் தாங்கிவரும் என்று நினைத்து இதற்கு அனுமதி தந்தேன். ஆனால், முழுக்க முழுக்க என்னைப் பற்றிய செய்திகளைக் கொண்டதாக இது இருக்கிறது. நான் வாழும் காலத்திலேயே என் கண் முன்னே என்னைப் புகழ்ந்து எழுதப்படும் கட்டுரையை எப்படிப் பொறுத்துக் கொள்வது. துறவி என்பவன் புகழை ஒரு பொருட்டாக ஏற்காதவனாக கருதாதஇருக்கவேண்டும். புகழையும் உதறித் தள்ளுபவன்தான் உண்மையான துறவி. எனவே, இந்தக் கட்டுரையை நிறுத்தும்படி கல்கி நிர்வாகத்திடம் கூறி விடு என்று சொல்லிவிடு என்று சொல்லிவிட்டார் மகாசுவாமிகள்.

கல்வி வாசகர்களும் நிர்வாகமும் தவிர்க்க இயலாமல் அக்கட்டுரையை வருத்தத்துடன் நிறுத்தினர்.

புகழைத் தேடி அலைகின்ற – புகழுக்காக ஏங்குகிற காலகட்டத்தில் வந்த புகழைத் தூக்கி எறிந்த மகாசுவாமிகளும் வாரியார் சுவாமிகளும் இறை வடிவானவர்கள். உண்மையான ஞானிகள். தூய்மைநிறை துறவிகள்..

*கருணை மழை தொடரும்...*





# பழனி பங்குனி உத்திர விழாவில் நம் இனத்தவர்களின் பக்தி சொற்பொழிவு மற்றும் இசை நிகழ்ச்சி

24.03.24 ஞாயிற்றுக்கிழமை அன்று பழனி ஸ்ரீ பாலதண்டாயுதபாணி திருக்கோயில் பங்குனி உத்திர திருவிழாவில் நமது குலமக்கள் இருவர் சிறப்பிக்கப்பட்டுள்ளனர். 24 மனை குலமுரசு இதழின் ஆசிரியர், தமிழ்ச்செம்மல் முனைவர் உடுமலை துரைஅங்குசாமி (8 வீடு – சொப்பியர் குலம்) அவர்கள் மாலை 5 மணிக்கு "ஞானத்தமிழ் வளர்த்த நாவுக்கரசர்" என்ற தலைப்பில் பக்தி சொற்பொழிவாற்றினார். அதனைத் தொடர்ந்து திருப்பூர் செல்வி சண்முக பாக்யஸ்ரீ (பலிவிதியர் குலம்) அவர்களின் பக்தி இன்னிசை நிகழ்ச்சி நடைபெற்றது. இவ்விரு நிகழ்ச்சியையும் ஆயிரக்கணக்கான பக்தர்களும், பொதுமக்களும், ஆன்மீகவாதிகளும் கண்டுகளித்தனர்.

– செய்தித் தொகுப்பு: அ.சுரேஷ், குலமுரசு நிருபர்



**தெலுங்கு மொழி எழுத்துக்களை 24 மனை தெலுங்கு செட்டியார் மக்கள் கற்கவேண்டும் என்ற ஆர்வத்தை தூண்டுவதற்கான ஒரு முயற்சி.**

## தெலுங்கு எழுத்துகள் மற்றும் உச்சரிப்பு முறை

### Telugu Vowels - தெலுங்கு உயிர் எழுத்துகள்

| అ | ఇ | ఉ | ఋ | ఎ | ఐ | ఓ | అం |
|---|---|---|---|---|---|---|---|
| அ(a) | இ(i) | உ(u) | ரு(ru) | எ(ae) | ஐ(ai) | ஓ(oo) | அம்(am) |
| ఆ | ఈ | ఊ | ౠ | ఏ | ఒ | ఔ | అః |
| ஆ(aa) | ஈ(ii) | ஊ(uu) | ரூ(ru:) | ஏ(aee) | ஒ(o) | ஔ(au) | அஹ(aha) |

### Telugu Consonants - தெலுங்கு மெய்யெழுத்துகள்

| క | చ | ట | త | ప | య | ష | ఱ |
|---|---|---|---|---|---|---|---|
| க(ka) | ச(ca) | ட(tta) | த(ta) | ப(pa) | ய(ya) | ஷ(sha) | ற(Ra) |
| ఖ | ఛ | ఠ | థ | ఫ | ర | స | |
| க்ஹ(kha) | ச்ஹ(cha) | ட்ஹ(ttha) | த்ஹ(tha) | ப்ஹ(pha) | ர(ra) | ஸ(sa) | |
| గ | జ | డ | ద | బ | ల | హ | |
| க (ga) | ஜ(ja) | ட(dda) | த(da) | ப(ba) | ல(la) | ஹ(ha) | |
| ఘ | ఝ | ఢ | ధ | భ | వ | ళ | |
| க்ஹ(gha) | ஜ்ஹ(jha) | ட்ஹ(ddha) | த்ஹ(ddha) | ப்ஹ(bha) | வ(va) | ள(la) | |
| ఙ | ఞ | ణ | న | మ | శ | క్ష | |
| ங(nga) | ஞ(nya) | ண(nna) | ந(na) | ம(ma) | ஸ(sa) | க்ஸ(ksha) | |

### Telugu Vowels+Consonants - தெலுங்கு உயிர்மெய்யெழுத்துகள் சில

| కా | కీ | కూ | కౄ | కే | కొ | కౌ | కః |
|---|---|---|---|---|---|---|---|
| (kaa) | (kii) | (kuu) | (kr:) | (kee) | (ko) | (kau) | (kah) |
| కి | కు | కృ | కె | కై | కో | కం | |
| (ki) | (ku) | (kru) | (ke) | (kai) | (koo) | (kam) | |

### Telugu Numbers - தெலுங்கு எண்கள்

| 0 (பூச்சியம்) | 2 (இரண்டு) | 4 (நான்கு) | 6 (ஆறு) | 8 (எட்டு) | 10 (பத்து) |
|---|---|---|---|---|---|
| ౦ | ౨ | ౪ | ౬ | ౮ | ౧౦ |
| సున్న (Sunna) | రెండు (Rendu) | నాలుగు(Nalugu) | ఆరు (Aaru) | ఎనిమిది(Enimidi) | పది (Padi) |
| 1 (ஒன்று) | 3 (மூன்று) | 5 (ஐந்து) | 7 (ஏழு) | 9 (ஒன்பது) | 100 (நூறு) |
| ౧ | ౩ | ౫ | ౭ | ౯ | ౧౦౦ |
| ఒకటి (Okadi) | మూడు (Mudu) | ఐదు (Aidu) | ఏడు (Edu) | తొమ్మిది (Tommidi) | వంద (Vanda) |

- டாக்டர் **P.S.சசிகுமார்** MBBS., DNB., குழந்தைகள் நல மருத்துவர், ஒட்டன்சத்திரம்.

விளம்பரம்

# சிரமங்களைக் குடி.... சிக்கல்களைச் சாப்பிடு!

ஐம்பது வயதுக்கு மேற்பட்டவர்கள் ‘‘எங்க காலத்தில் எல்லாம்’’ என்றும் ‘‘நாங்கல்லாம் பட்ட கஷ்டம்’’ என்றும் வாயைத் திறந்தாலேயே பதினைந்து இருபது வயதினர்க்குத் தீப்பிடித்து விடுகிறது. ‘‘ஆரம்பிச்சுட்டாங்காய்யா’’ என்று அலட்சியமாகப் பேசுகிறார்கள். ‘‘அசோகர் மரங்களை நட்டார், அக்பர் ஆட்சிக்கு வந்தார்’’ என்பது மட்டும் வரலாறல்ல நண்பர்களே.. ‘அம்மா இட்லி சுட்டு படிக்க வைத்தார்.. அப்பா கடன் வாங்கிக் கஷ்டப்பட்டார்’ என்பவை கூட மிகப்பெரிய வரலாறுகள் தான். மதிப்பெண் தருவது முதல் வகை. மதிப்பு தருவது இரண்டாவது வகை. இளமையில் வறுமை என்பது இந்தியாவில் எண்பது சதவிகிதம் மக்களின் வாழ்க்கைக் கணக்கு..



அப்போதெல்லாம் இரண்டு யூனிபார்ம் தைக்க வசதி கிடையாது. முதல் வருட சட்டை, டிராயர் தொப்பை பட்டன் அறுந்து அவமானப்பட்ட பின்தான் அம்மா பரிந்துரைக்க அப்பா அர்ச்சனை முழங்க யூனிபார்ம் அருள் புரிவார். எத்தனையோ முறை பள்ளியிலிருந்து பணக்காரப் பசங்க(!) பஸ்மூலம் சுற்றுலா புறப்படுவார்கள். ஆசைப்பட அருகதை அற்ற நாங்கள் காசில்லாத காரணத்தால் கண்ணீர் முட்ட, கையசைத்து வழி அனுப்புவோம். வருடம்தோறும் வகுப்பு முழுவதையும் போட்டோ எடுப்பார்கள். வாங்க வழியில்லாத என் வகுப்புத் தோழர்கள் ‘‘வீட்டிற்கு எடுத்துப்போய் காட்டிவிட்டு வருகிறேன்’’ என்று பாவமாகக் கெஞ்சுவார்கள். கையேந்துவார்கள். கருணை கொடுக்கச் சொல்லும். போட்டோ ஏதேனும் ஆகிவிட்டால் என்று எச்சரிக்கை உணர்வு தடுக்கும். தவியாய்த் தவிப்போம். மூன்று மாணவர்கள் சேர்ந்து காசுபோட்டு ஒரே போட்டோ வாங்கியதும் உண்டு. மனம் விட்டுச் சொல்லவா? விடுதலைப் போராட்ட வீரர்களின் தியாகங்கள் விவரமாகத் தெரியாததால் நாடு நாசமாகிறது. பெற்றோரின் கஷ்டங்கள் விவரமாகப் புரியாததால் வீடு மோசமாகிறது.

அண்மையில் தஞ்சை சாஸ்த்ரா பல்கலைக் கழகத்தில் பேசப் போயிருந்தோம். என்ன அழகான அரங்கம் தெரியுமா? துல்லியமான ஒலிவாங்கி.. ஒலிபெருக்கி.. குளிரூட்டப்பட்ட அரங்கில் உயிரூட்டப்பட்ட ரசனையுடன் மாணவர்கள்.. ஆயிரம் பேருக்குக் குறையாமல் அமரும் வசதிவாய்ப்பு.. எங்கள் காலத்தில் மரத்தடிதான் விழா அரங்கம்.. இலக்கியக் கூட்டங்களில் பேச்சாளர்கள் பேசும் போது பேச்சாளரை ரசிக்க முடியாது. மரத்திலிருக்கும் காக்கை எப்போது எச்சம் போடுமா என்ற அச்சத்தில் அதையே கவனிப்போம். சில காக்கைகள் பேச்சாளர்களை விட அழகானவை. பண்பாடு மிக்கவை. கொஞ்சநேரம் கத்திவிட்டு கவுரமாகப் பறந்து போய்விடும். இப்போது படிக்கும் இளையோருக்கு எத்தனை எத்தனை வசதிகள்? எவ்வளவு சவுகர்யங்கள்? ஏகப்பட்ட துணைக் கருவிகள்? நாம் எத்தனை வசதியாக வாழுகிறோம் என்கிற பிரக்ஞையே.. அவர்களில் பலரிடம்



**சொல்வேந்தர்**
**சுகிசிவம்**

இல்லை, என்பது தான் பெற்றோர்களின் பிரச்சனை. நாங்கள் ஒரு ஜயோமென்ட்ரிபாக்ஸ்க்கு எத்தனை பேரிடம் கையேந்த வேண்டும் தெரியுமா? பெற்றோர்களுக்குச் சொல்லுகிறேன். "உங்கள் பிள்ளைகளிடம் சொல்லி வையுங்கள். பிள்ளைகள் கேட்டாலும் கேட்காவிட்டாலும் வறுமையின் வரலாற்றை உரிமை மாறாமல் உரக்கச் சொல்லுங்கள். உறைக்கும்படியும் சொல்லுங்கள்."





ஒரு சம்பவம் படித்தேன்.. முப்பதாண்டுக்கு முந்தைய சம்பவம். தமிழாசிரியர் மாணவர்களுக்கு ஓர் உத்தரவு போடுகிறார். "நாளை.. இந்தக் கட்டுரைப் பாடம் நடத்தப்படும். ஒவ்வொரு மாணவனும் ஆசிரியர் படிக்கச் சொல்லும் பாராவை (பகுதி) உரக்கப் படிக்க வேண்டும். மறவாமல் தமிழ்ப் புத்தகம் கொண்டுவர வேண்டும்" இதுதான் ஆசிரியர் கட்டளை. மறுநாள் ஆசிரியர், மாணவர்களை அடுத்தடுத்து வரிசையாகப் படிக்கச் சொல்லுகிறார். ஒரு மாணவன் ஒரு பாராவீதம் படிக்க வேண்டும். ஒரு மாணவன் (Turn) நேரம் வந்ததும் கைகளைக் கம்பீரமாகக் கட்டிக் கொண்டு அந்தப் பாராவை அப்படியே மனப்பாடமாக ஒப்புவித்தான். வகுப்பே சிலிர்த்து விட்டது. ஆசிரியர் திகைத்தார். "புத்தகம் எங்கே?" என்று உறுமினார். "வாங்க காசில்லை" என்றான் மாணவன். "இந்தப் பாராவுக்குப் பதில் அடுத்தபாரா படி என்று நான் சொன்னால் என்ன செய்வாய்?" என்றார் ஆசிரியர். "கட்டுரை முழுவதும் மனப்பாடம்" என்றான் மாணவன். இந்தச் செய்தி வரலொட்டி ரங்கசாமி அவர்கள் கட்டுரையில் நான் படித்தது. அந்தக்கால மாணவர்கள் புத்தகம் வாங்கவும் வழியில்லாமல் படித்தோம் என்பதை இன்றைய இளையோர் தயவு செய்து உணர்ந்து மதிக்க வேண்டும்.

ஒரு முறை நானும் பட்டிமன்றப் பேரரசர் சாலமன் பாப்பைய்யா அவர்களும் ஒன்றாக ஏர்இந்தியா விமானத்தில் சிங்கப்பூர் பயணித்த போது வழிநெடுக தம் வாழ்க்கை அனுபவங்களை ஐயா சொல்லிக் கொண்டே வந்தார். மறக்க முடியாத நெகிழ்ச்சியான பயணம். பேராசிரியர் சாலமன் பாப்பையா தம் மகனுக்குத் தியாகமூர்த்தி என்று பெயர் வைத்துள்ளார். இந்தப் பெயர் இயேசு பிரானுக்குப் பொருந்தும் என்றாலும் தியாகராஜன், இராமமூர்த்தி என்கிற தமது உயிருக்குயிரான இரண்டு இந்து நண்பர்களுக்கான நன்றி வெளிப்பாடு அது என்று சொன்னார்.

கல்லூரியில் படிக்கும் காலத்தில், வறுமையால், கல்விக் கட்டணம் கட்ட முடியாமல் கடைசி நாள்வரை சிரமப்பட்டார் அவர். அவரது நண்பரோ தமது சைக்கிளை விற்று இவருக்கான பணம் கட்டினாராம். தமது இன்னொரு நண்பரோ, அவரது தந்தை, அவருக்கு அனுப்பிய பரிட்சைக் கட்டணத்தைப் பாப்பைய்யாவுக்குக் கட்டினாராம். "உனக்குப் பரிட்சைக்குப் பணம் கட்ட வேண்டாமா?" என்று பாப்பய்யா அவர்கள் கவலைப்பட்டபோது "நீ.. முதல் மதிப்பெண் பெறக்கூடியவன் அது வீணாகக் கூடாது" என்றாராம் நண்பர். "தியாகராஜனில் தியாகத்தையும் இராமமூர்த்தியில் மூர்த்தியையும் இணைத்து தியாகமூர்த்தி என்று மகனுக்குப் பெயர் வைத்தேன்" என்றார் ஐயா சாலமன். முதுகலை படிக்கும் போது கூட காலில் செருப்பணிய வசதி இல்லை என்று வெளிப்படையாகப் பேசினார். "சல்யூட் பாப்பய்யா சார்! இன்று நீங்கள் மேடைப் பேரரசர்."

ஆனால், இன்றோ வறுமை என்பது சிலரது பிரச்சனை மட்டுமே.. ஆனால் இளைய தலைமுறை சின்னச் சின்ன சிரமங்களைக் கூட பெரிய பிரச்சனையாகக் கருதுவது தான் வேடிக்கையாக இருக்கிறது. வசதியைக் காரணம் காட்டி, நெருங்கிய உறவினர்கள் வீடுகளில் கூட பிள்ளைகள் தங்க மறுக்கிறார்கள். தங்கி மகிழ்கிற மகிழ்ச்சியைக் கூட அசௌகர்யங்களைப் பெரிதாக நினைப்பதால் இழந்து போகிறார்கள். உணவு விஷயங்களில், நேர நியதிகளில், நாள் கிழமை, பண்டிகை சமயங்களில், கொஞ்சம் மாறினாலும் பெரிய ஆர்ப்பாட்டம் செய்கின்றனர். உறவுகளின் திருமணத்திற்கு ஊர்வரை வந்த இளம்பிள்ளைகள் முகூர்த்தம் அதிகாலை என்றால் தூக்கம் விட முடியாமல் தூங்கித் தொலைக்கிறார்கள். எல்லாமே தன் வசதிக்கு இருக்க வேண்டும் என்கிறார்களே ஒழிய, இருப்புக்கு ஏற்ப தன்னை மாற்றி வடிவமைக்க மறுக்கிறார்கள். இவையாவும் வளர்ச்சிக்கு நன்மை தராது என்கிறேன். ●

- கிழங்குகளை வேகவைக்க, அரிசி கழுவிய நீரை பயன்படுத்தினால் சீக்கிரம் வெந்துவிடும்.
- அவியல் செய்யும்போது தேங்காய், பச்சை மிளகாய், சீரகம் இவற்றுடன் சிறிது ஊறவைத்த கசகசாவைச் சேர்த்து அரைத்தால் அவியல் திக்காகவும், சுவையாகவும் இருக்கும்.
- முளைவிட்ட தானியங்களுடன் பயறை சேர்த்து சாப்பிடக்கூடாது. இவை இரண்டிலும் புரோட்டின் மிக அதிகமாக இருப்பதால், ஜீரணம் ஆக மிகவும் தாமதமாகும்.
- சப்பாத்தி மாவுடன் துருவிய கேரட் மற்றும் பொடியாக நறுக்கிய மல்லித் தழையைப் போட்டு பிசைந்து சப்பாத்தி செய்தால் பார்க்க அழகாகவும் சத்தாகவும் இருக்கும்.
- ரவா லட்டு, பொட்டுக்கடலை லட்டு செய்யும் போது மொத்த மாவு அளவில் கால்பங்கு பசும்பால் கலந்து செய் தால் மிகவும் ருசியாக இருக்கும்.
- தோசை சரியாக எடுக்க வராவிட்டால், ஒரு வெங்காயத்தை வெட்டி தோசைக் கல்லில் தேய்த்துவிட்டு பிறகு தோசை வார்த்தால் சரியாக வரும்.
- இட்லி மாவை அரைத்து ஃபிரிட்ஜில் வைக்கும்போது, பெரிய பாத்திரத்தில் ஊற்றிவைத்தால் பொங்கி வழியாது.
- எந்த வகை கேசரி செய்தாலும் மூன்று தேக்கரண்டி தேங்காய்ப்பால் சேர்த்தால் சுவை கூடுதலாக இருக்கும்.
- கோதுமையில் பரோட்டா செய்யும் போது ஒரு தேக்கரண்டி ஓமம் கலந்து செய்யலாம். சுவையாகவும் இருக்கும். எளிதில் ஜீரணமும் ஆகும்.
- ரவா இட்லி செய்யும்போது சிறிது சேமி யாவை வறுத்து, தயிரில் ஊறவைத்துச் சேர்த்தால் கூடுதல் ருசி தரும்.
- ரசம் வைக்கும்போது கறிவேப்பிலை இல்லையென்றால் சிறிதளவு முருங்கை இலைகளைத் தூவி இறக்க, அது தனிச்சுவையைத் தரும்.
- எலுமிச்சம் பழத்தோலை ஃபிரிட்ஜில் வைத்து, கேக் புட்டிங் வகைகள் தயா ரிக்கும்போது சேர்த்தால், அதிக ருசி கிடைக்கும்.
- பலகாரங்கள் தயாரிக்க பலதரப்பட்ட எண்ணெய் வகைகளைப் பயன்படுத்தக்கூடாது. ஒரே வகையான எண்ணெயைத்தான் பயன்படுத்த வேண்டும்.
- அடுப்பில் சாம்பார், ரசம் பொங்கி வழியாமல் இருக்க, பாதி கொதி வரும்போதே இரண்டு ஸ்பூன் சமையல் எண்ணெய் விட்டால் பொங்கி வழியாது.
- பாலித்தீன் பாக்கெட்டுகளில் வாங்கும் வனஸ்பதி, நெய்யை லேசான சுடுநீரில் போட்டு வைத்து, பிறகு கட் செய்து பாட்டில்களில் ஊற்றினால் சுத்தமாக வடித்து எடுத்துவிட முடியும்.
- கேழ்வரகை ஊறவைத்து, அரைத்து பால் எடுத்து அல்வா தயாரித் தால், கோதுமை அல்வா போன்று சுவையாக இருக்கும்.
- தோசைக் கல்லில் சூடு அதிகமாகி விட்டால் தோசை எடுக்க வராது. சிறிது தண்ணீர் தெளித்து, கல்லைக் குளிர்வித்து தோசை வார்த்தால் சரியாகிவிடும்.
- வெஜிடபிள் சூப்பின் சுவையை அதிகரிக்க அதன்மீது பாலாடைக் கட்டியைத் துருவி தூவலாம். அல்லது ஒரு தேக்கரண்டி கிரீம் கலக்கலாம்.





# பொள்ளாச்சியில் கே.எம்.சண்முகம் (16 வீடு - கெந்தவங்கலவர் குலம்) அவர்களின் 'தாயம்மா' சிறுகதை நூல் வெளியீட்டு விழா

பொள்ளாச்சி கம்பன் கலை மன்றத்தின் தலைவர் எழுத்தாளர் கே.எம். சண்முகம் (16 வீடு – கெந்தவங்கலவர் குலம்) எழுதிய இரண்டாவது சிறுகதைத் தொகுப்பு நூல் ''தாயம்மா'' வெளியீட்டு விழா 23.03.24 சனிக்கிழமையன்று பத்மஸ்ரீ கவிஞர் சிற்பி அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது.

நிகழ்வுக்கு முன்னதாக த.நல்லிக்கவுண்டன் பாளையம் பள்ளி மாணவ மாணவிகளின் கலை நிகழ்ச்சிகள் நடைபெற்றன.

கவிஞர் சிற்பி நூலை வெளியிட்டு தலைமையுரை ஆற்றினார். மாறுபட்ட கதைக் களங்களின் பின்னணியில் சமுதாயத்திற்குத் தேவையான கதைக் கருக்களைத் தேர்வு செய்து எளிமையான மொழியில் எழுதப்பட்ட இந்த நூல் மிகவும் பாராட்டத்தக்கது என்றும் மேன்மேலும் சிறந்த படைப்புகளை நூலாசிரியர் தொடர்ந்து தரவேண்டும் என்று வாழ்த்திப் பேசினார். நூலின் முதல் பிரதியைப் பெற்றுக் கொண்டு எழுத்தாளர் ரவி வாமனன் நூல் குறித்து அறிமுக உரையாற்றினார்.

கவிஞர்கள் சுடர்விழி இரா.பூபாலன் நூலின் சிறப்புக்கள் பற்றி நயவுரை வழங்கினர். கவிஞர்கள் மு.அறவொளி ரமேஷ், சென்னியப்பன் வாழ்த்துரை வழங்கினர்.

கவிஞர்கள் குமார், பாபு நிகழ்ச்சியைத் தொகுத்து வழங்கினர். நூலாசிரியர் கே.எம். சண்முகம் ஏற்புரை வழங்க, ஓ.பி.திருவேங்கடராஜ் நன்றியுரை கூறினார்.

நிகழ்ச்சிக்கான ஏற்பாடுகளை மன்றச் செயலர் தே.நா.சிவக்குமார் மற்றும் நிர்வாகிகள் ரவீந்திரன், நசீர் அகமது, காளிமுத்து, தங்க சரவணன் செய்திருந்தனர்.

*செய்தித் தொகுப்பு: D.ரவீந்திரன், பொள்ளாச்சி*


**குலமுரசு ஆண்டு சந்தா செலுத்த எளிய வழிமுறை**

**கூகுள் பே, போன்பே, பீம்ஆப் உள்ளிட்ட எந்த ஒரு UPI செயலி மூலமாகவும் கீழ்க்கண்ட QR கோட் ஸ்கேன் செய்து குலமுரசுக்கு ஆண்டு சந்தா ரூ.300 செலுத்தலாம்.**

24 MANAI KULAMURASU

71366585014869@cnrb

**பணம் செலுத்தியபிறகு Transaction எண் உள்ள பக்கத்தையும் உங்கள் தபால் முகவரியையும் எங்கள் 9965900990 வாட்ஸ்அப் எண்ணிற்கு அனுப்பிவைக்கவும்.**

# வாசகர் குரல்

மார்ச் மாத குலமுரசின் அட்டை அருமையிலும் அருமை. பழனி மலைக்கோயிலின் முன்புறம் முருகப்பெருமான் ஒய்வாக அமர்ந்திருக்கும் படம் வித்தியமான கோணத்தில் காணப்படுகிறது. அழகன் முருகனை அழகிய பழனிமலையின் பின்புலத்தில் அழகாகச் சித்தரித்துள்ள குலமுரசுக்குப் பாராட்டுக்கள்.

**– M.K.ரவீந்தரன், திண்டுக்கல்.**

பங்குனி உத்திர நாளின் சிறப்புகளை அடுக்கடுக்காக போன மாத குலமுரசில் எடுத்து விளக்கிய செய்திகள் பிரம்மாதம். தெய்வக் கல்யாணங்கள் ஏராளமாக நடந்துள்ள மாதம் என்பதையும் ஐயப்பன், வள்ளி, அர்ஜூனன் போன்றவர்கள் அவதரித்த நாள் பங்குனி உத்திரம் என்பதையும் குலமுரசு மூலம் அறிந்து மகிழ்ந்தேன். மகாப்பெரியவாவின் மகிமையை மாதம்தோறும் குலமுரசில் படிக்கிறேன். கடந்த மாதம் கோவிந்த பட்டாபிஷேகத்தை மகாப்பெரியவா நடத்தி வைத்த அற்புதத்தை படித்து மெய்சிலிர்த்துப் போனேன். மகாப்பெரியவாளை நாம் வாழ்நாளில் தரிசிக்க இயலாமல் போய்விட்டதே என்கிற வருத்தம் நிறைய உள்ளது.

**– R.N.கண்ணாயிரம், சேலம்.**




ராமனுடைய மனைவி சீதை என்பது மட்டும்தான் எங்களுக்குத் தெரியும். இலட்சுமணன் மனைவி ஊர்மழை என்பதும் பரதன் மனைவி மாண்டவி என்பதும் சத்ருகனன் மனைவி ஸ்ருதிகீர்த்தி என்பதும் குலமுரசு மூலம் தான் அறிந்தேன். குலமுரசு ஒரு ஆன்மீகக் களஞ்சியம்.

**– மாலதி விசுவநாதன்,**
**திருத்தணி.**

வாரியார் சுவாமிகள் எழுதிய கிழவியின் நிழல் என்ற கட்டுரையை கடந்த மாத குலமுரசில் படித்து மிகமிக சந்தோஷப்பட்டோம். வாரியார் என்ற அறிவுக் கடலின் சில துளிகளை அருந்தும் பாக்கியம் குலமுரசு மூலம் கிடைத்தது மகிழ்ச்சி.

**– M.கருணாகரன், மாலதி கருணாகரன்,**
**திருவொற்றியூர், சென்னை – 21.**

குலமுரசில் வெளிவரும் மணக்கோலம் பகுதி மிகமிக பயனுள்ளது. இப்பகுதி மூலம் பல திருமணங்கள் கைகூடுகின்றன. போன மாதக் குலமுரசில் வெளிவந்த மணக்கோலம் தந்த மணக்கோலம் என்ற தலைப்பில் T.கோகுல்ராம் – G,தர்ஷினி திருமணப் புகைப்படத்தைப் பார்த்து மிகவும் சந்தோஷப்பட்டோம். திருமண புரோக்கர்கள் கைவரிசை காட்டும் இந்தக் காலகட்டத்தில் 24 மனையாருக்காக இலவச மணக்கோலம் பகுதியை வெளிப்படைத் தன்மையுடன் பிரசுரிக்கும் குலமுரசுக்கு எங்களது மனமார்ந்த பாராட்டுதல்கள்.

**– R.ராமகிருஷ்ணன்,**
**செந்தாமரை, புரசைவாக்கம்,**
**சென்னை.**

கோடைக்கேற்ற மூலிகையாய் நன்னாரியை தேர்ந்தெடுத்து அதன் சிறப்புகளை மாதம் ஒரு மூலிகையில் எடுத்துச் சொல்லியிருந்த பாங்கு மிகவும் நன்றாக இருந்தது. சர்பத்துக்கு மட்டும் பயன்படும் இந்த நன்னாரி வேர் என்று நினைத்திருந்தேன். இவ்வளவு மருத்துக்குணங்கள் இதில் உள்ளது என்பதைப் படித்தபோது வியந்து போனேன்.

**– இரா.திருமலைசாமி,**
**பொள்ளாச்சி.**



# பெதப்பம்பட்டி 8 வீடு லக்குவார் குலதெய்வக் கோயில் ஹோம பூஜைகள்

திருப்பூர் மாவட்டம் பெதப்பம்பட்டியில் எழுந்தருளியுள்ள 24 மனை தெலுங்கு செட்டியார்களின் 8 வீட்டுக் குலங்களில் ஒன்றான லக்குவார் குலத்தின் குலதெய்வமான அருள்மிகு ஸ்ரீதேவி பூதேவி சமேத ஸ்ரீ வரதவெங்கடாஜலப் பெருமாள் ஸ்ரீ வீரமாட்சி அம்மன் திருக்கோயிலில் 24.03.2024 ஞாயிற்றுக்கிழமை பங்குனி உத்திர நாளில் விசேஷ ஹோம பூஜைகள் நடைபெற்றன.

குலமக்களின் நலனுக்காகவும் குலதெய்வக் கோயில் விருத்திக்காகவும், குலம் செழித்துத் தழைக்கவும் இந்த ஹோம பூஜைகள் நடத்தப்பட்டன. மகாகணபதி ஹோமத்துடன் தொடங்கி திருஷ்டி தோஷங்களிலிருந்து நிவர்த்தி தரும் மகா சுதர்சன ஹோமம் மற்றும் செல்வ வளத்தை வாரி வழங்கும் மகாலட்சுமி ஹோமம் மகா விஷ்ணு ஹோமம் மற்றும் ஸ்ரீ ருத்ர நமகசமக ஹோமம், ஸ்ரீ துர்கா பரமேஸ்வரி ஹோமம் ஸ்ரீ நரசிம்மர் ஹோமம் ஸ்ரீ ஆஞ்சநேயர் ஹோமம் முதலியன நடைபெற்றன.



விழா ஏற்பாடுகளை திருக்கோயில் நிர்வாகத்தினர் மற்றும் மகளிர் குழுவினர் திறம்பட செய்திருந்தார்கள். குலமக்கள் குடும்பத்தாருடன் கலந்து கொண்டு ஹோம வழிபாட்டை தரிசித்தனர்.

*– தகவல்: V.சண்முகம், உடுமலைப்பேட்டை.*





# மணக்கோலம்

## கட்டணமில்லாத இலவச சேவை

1. 24 மனை குலமுரசின் மணக்கோலம் பகுதி வெளிப்படையானது. வரன் வேண்டுவோர் பயன்பாட்டிற்கான இலவசச் சேவை இது. வணிக நோக்குடையவர்கள் - இடைத்தரகர் கள் எந்த நிலையிலும் மணக்கோலம் பகுதியைப் பயன்படுத்தக் கூடாது.
2. மணக்கோலம் பகுதிக்கு விண்ணப்பிப்பவர் கள் குலமுரசு சந்தா தாரர்களாக வேண்டும்.
3. வரன் தகவல்கள் 3 மாத இதழ்களில் மட்டுமே வெளியிடப்படும். ஏராளமானவர்கள் விண் ணப்பம் செய்வதால் தொடர்ந்து வெளியிட இயலவில்லை. 3 மாதங்களுக்குப் பிறகு மீண்டும் விண்ணப்பம் தந்தால் மறு படியும் 3 மாதங்களுக்கு வெளியிடப்படும்.
4. வரன்களுக்கு திருமணம் நிச்சயமாகிவிட் டால் உடனடியாகத் தெரிவிக்க வேண்டும்.
5. மணக்கோல விண்ணப்ப மாதிரிப் படிவம்

   1. பெயர் ..........................................
   2. படிப்பு ..........................................
   3. பணி ................. 4.வருமானம் ...........
   5. வீடு 8 / 16 6. குலம் ..................
   7. பிறந்தநாள் ......................................
   8. ராசி. .................. 9.நட்சத்திரம்.........
   10. பெற்றோர் பெயர் ..........................
   11. ஊர் ..... ...........................................
   12. தொலைபேசி எண்: .......................

மேற்கண்ட அனைத்துத் தகவல்களுடன் குலமுரசு சந்தா செலுத்தியதற்கான விபரத்தையும் (Transaction Ref ID Screenshot or Bank Challan) **9965900990** என்ற எண்ணிற்கு வாட்ஸ்அப் மூலமாக அல்லது manakolam24@gmail.com என்ற மின்னஞ்சல் முகவரிக்கு அனுப்பிவைக்கவும்.

# 24 மனை குலமுரசு

## ஆண்டு சந்தா ரூ. 300/- மட்டுமே

## சந்தா செலுத்துவது எப்படி?

படத்திலுள்ள **UPI QR Code**-ஐ ஸ்கேன் செய்து அனுப்பலாம்

A/c Name : 24 MANAI KULAMURASU
Bank Name : CANARA BANK
Branch : CHENNAI KILPAK
A/c Number : 1650101014869
IFSC CODE : CNRB0001650

மேற்கண்ட வங்கிக் கணக்கில் ஆன்லைன் மூலம் ரூ.300/- செலுத்தி அதன் பரிவர்த்தனை விபர ஸ்கிரீன்ஷாட்-ஐ **9965 900 990** என்ற வாட்ஸ்அப் (அ) kulamurasuoffice@gmail.com என்ற மின்னஞ்சல் முகவரிக்கு உங்கள் முகவரி மற்றும் செல்போன் எண் குறிப்பிட்டு அனுப்பவும்.

கனரா வங்கியில் செலான் மூலம் பணமாக செலுத்துவோர் சந்தா ரூ.300 + வங்கி சேவைக் கட்டணம்+ GSTவரி ரூ.60 சேர்த்து ரூ.360/-ஐ கனரா வங்கிக் கணக்கில் செலுத்தி, கௌண்டர் ஃபைல் ரசீது நகலுடன் உங்கள் முகவரி எழுதி மின்னஞ்சல் (அ) வாட்ஸ்அப் (அ) தபாலில் அனுப்பவும்.

24 மனை குலமுரசு,
330/1, சின்னாண்டான் கோவில் வீதி,
கரூர் - 639001.
**Customer Care Cell: 9965 900 990**

- ✿ பிரதி மாதம் 5ஆம் தேதிக்குள் கிடைக்கப்பெறும் சந்தாக்களுக்கு அந்த மாதத்திலிருந்து குலமுரசு புத்தகம் அனுப்பிவைக்கப்படும்.
- ✿ பிரதி மாதம் 5ஆம் தேதிக்குப் பிறகு கிடைக்கப் பெறும் சந்தாக்களுக்கு அடுத்த மாதத்திலிருந்து குலமுரசு அனுப்பிவைக்கப்படும்.
- ✿ குலமுரசு சந்தா செலுத்திய செலானை படம் எடுத்து அனுப்பும்போதே மணக்கோலம் விபரத்தையும் சேர்த்து அனுப்பவும்.

## குலமுரசு வரவில்லையா?

உங்கள் ID எண் குறிப்பிட்டு **9965 900 990** என்ற தொலைபேசி எண்ணுக்கு தகவல் தெரிவிக்கவும். அல்லது kulamurasuoffice@gmail.com - என்ற மின்னஞ்சல் முகவரிக்கு அனுப்பவும்.



# மணக்கோலம்

இந்த மின்னிதழில் உள்ள வரன் விபரங்களில் செல் எண்கள் காட்டப்படாது.
தனிநபர் பிரைவஸியை வேறு எவரும் தவறாகப் பயன்படுத்திவிடக்கூடாது என்பதற்காக நீக்கப்பட்டுள்ளது.
அச்சிடப்பட்ட இதழில் செல் எண்கள் உள்ளன. சந்தாதாரர்கள் அதனைப் பயன்படுத்திக் கொள்ளவும்.

## 16 வீடு ஆண்

**M16 - ID 10770 (EXP:OCT-2024) - 04/24(WA)**
பெயர்: S.கோபிநாத் பிறந்த நாள்: .12.1993
படிப்பு: BE., பணி:Expleo Solution, Chennai (IT)
வருமானம்: 80,000 குலம்: மும்முடியர்
நட்சத்திரம்: சதயம் தொடர்புக்கு: C.சேகர், சென்னை.
செல்: 00000 00000, 00000 00000

**M16 - ID 11696 (EXP:SEP-2024) - 04/24 (WA)**
பெயர்: கு.ஹரிபிரசாத் படிப்பு: M.E. Structural
பணி: Maestro Steel Detailing Inc, Chennai.
பிறந்ததேதி:.05.1995 வருமானம்: 4 லட்சம்/வருடம்
நட்சத்திரம்: பூரம் 2ம் பாதம் (ராகு,கேது)
குலம்: வம்மையர் செல்: 00000 00000
தொடர்புக்கு: அ.குமரவேல், ஈரோடு.

**M16 - ID 11860 - (EXP: MAR-2025) 04/24 (WA)**
பெயர்: M.கவியரசன் பிறந்ததேதி:.03.1993
கல்வி:MBA Hospital Administration.
பணி: Private Hospital Manager & Own Business
வருமானம்: 60,000/- நட்சத்திரம்: திருவோணம்
குலம்: மும்முடியர் தொடர்புக்கு: R.K.K.மனோகரன், பண்ணைக்காடு செல்: 00000 00000, 00000 00000

**M16 - ID 11644 (EXP:JUL-2024) - 04/24 (WA)**
பெயர்: N.பாலாஜி படிப்பு: M.Sc.,(CS)
பணி: Infosys, Cbe பிறந்ததேதி:.07.1980
வருமானம்: 18 லட்சம் நட்சத்திரம்: அஸ்தம்
குலம்: தரிசியர் செல்: 00000 00000
தொடர்புக்கு: T.நடராஜன், கோவை.

**M16 - ID 11808 (EXP:JAN-2025) - 04/24 (WA)**
பெயர்: H.சூர்யா கல்வி: B.E
பணி: IT Analyst, TCS, Chennai வருமானம்: 45000
குலம்: கப்பவர் பிறந்தநாள்: .09.1997
நட்சத்திரம்: பூரம் தொடர்புக்கு: ஹரிஹரன்.R,திருச்சி
செல்: 00000 00000, 00000 00000

**M16 - ID 11852 - (EXP: MAR-2025) 04/24 (WA)**
பெயர்: P.மணிகண்டன் கல்வி: B.E (MECHANICAL)
பணி: BUSINESS வருமானம்: 300000/MONTH
பிறந்ததேதி: -05-1998 நட்சத்திரம்: பூசம்
தொடர்புக்கு: M.V.பவுன்ராஜ், வடுகபட்டி
செல்: 00000 00000

**M16 - ID 11854 - (EXP: MAR-2025) 04/24 (WA)**
பெயர்:R.அருண்குமார் கல்வி: MBBS,MD
பணி: GOVT DOCTOR வருமானம்: 90,000
பிறந்ததேதி: .11.1991 நட்சத்திரம்: ஹஸ்தம் (3)
தொடர்புக்கு: ரமணி கணேசன், திருநெல்வேலி
செல்: 00000 00000, 00000 00000

**M16 - ID 10592- (EXP: MAR-2025) 04/24 (WA)**
பெயர்: R.M.திலிப் கல்வி: BE(Automobile Engineer)
பணி: Business(Proprietor of Siskin Media Company)
பிறந்தநாள்: 05.1994 நட்சத்திரம்:
தொடர்புக்கு: K.N.மகேந்திரன், பெங்களூரு-560087
செல்: 00000 00000, 00000 00000

**M16 - ID 7195 - (EXP: MAR-2025) 04/24 (OFF)**
பெயர்: அபிஷேக்(கிருபானந்த்) பிறந்ததேதி:.01.1997
கல்வி:BE வருமானம்: 60,000/- நட்சத்திரம்:
தொடர்புக்கு: மனோகரன், சேலம்.
செல்: 00000 00000

இந்த மின்னிதழில் உள்ள வரன் விபரங்களில் செல் எண்கள் காட்டப்படாது.
தனிநபர் பிரைவஸியை வேறு எவரும் தவறாகப் பயன்படுத்திவிடக்கூடாது என்பதற்காக நீக்கப்பட்டுள்ளது.
அச்சிடப்பட்ட இதழில் செல் எண்கள் உள்ளன. சந்தாதாரர்கள் அதனைப் பயன்படுத்திக் கொள்ளவும்.



மணக்கோலம் பகுதி விளம்பரப் பகுதி அல்ல. இதற்கு தனிப்பட்ட கட்டணம் ஏதும் கிடையாது. வரன் தகவல்களைப் பகிர்ந்து கொள்வதற்கான இலவச சேவைப் பகுதி.

## வாசகர்கள் கவனத்திற்கு

- ★ மணக்கோலம் பகுதி வெளிப்படையானது. நம் இனமக்கள் வரன் தகவல்களைப் பகிர்ந்து கொள்ள உதவும் இலவச சேவைப் பகுதி. இது விளம்பரம் அல்ல. இதற்கு தனியாகக் கட்டணம் கிடையாது.
- ★ மணக்கோலம் பகுதியில் வரன் விபரம் வெளியிட 24 மனை குலமுரசு இதழுக்கு ஆண்டு சந்தாதாரராக இருக்கவேண்டும் என்பது மட்டுமே விதிமுறை. புத்தக தயாரிப்பு செலவு பல மடங்கு அதிகரித்துவிட்டதாலும் மணக்கோலம் பகுதியை நிர்வகிப்பதில் உள்ள பிரச்சனைகளின் காரணமாகவும் ஒரு சந்தாவுக்கு ஒரு வரன் விபரம் மட்டுமே வெளியிடப்படும்.
- ★ இப்பகுதியில் வரன் பற்றிய தகவல்கள் மூன்று மாத இதழ்களில் தொடர்ந்து வெளியிடப்படும். மூன்று மாதங்களில் வரன் அமையாதவர்கள் மீண்டும் மூன்று மாதங்கள் மறுபிரசுரம் செய்து கொள்ளலாம். இம்முறையில் ஆண்டு சந்தா நிறைவடையும் காலம் வரை ஒருவர் நான்கு முறை மறுபிரசுரம் செய்து கொள்ளலாம்.
- ★ மணக்கோலம் பகுதியில் மறுபிரசும் செய்ய, விபரம் சேர்க்க, சந்தா விபரம் அறிய 9965900990 என்ற செல்பேசி எண்ணிற்கு தொடர்பு கொள்ளவும் அல்லது manakolam24@gmail.com என்ற மின்னஞ்சலில் தெரிவிக்கவும்.
- ★ வரன்களுக்குத் திருமணம் உறுதிசெய்யப்பட்டால் சேவை மைய எண்ணில் தொடர்பு கொண்டு வரன் தகவலை நீக்கிக் கொள்ளலாம்.
- ★ ஒவ்வொரு மாதமும் 5ம் தேதிக்கு முன்பு வரும் வரன் தகவல்கள் மட்டுமே அம்மாத இதழில் இடம்பெறும். அதற்குப்பின் வருபவை அதற்கடுத்த இதழில் இடம்பெறும்.
- ★ இப்பகுதியில் வெளியாகும் வரன் விபரங்களுக்கு வெளியிடும் குடும்பத்தாரே முழுப்பொறுப்பு. மணமகன் அல்லது மணமகள் குறித்த விபரங்களை சம்பந்தப்பட்ட குடும்பத்தாரே தொடர்பு கொண்டு விசாரித்து தங்களுடைய சொந்தப் பொறுப்பில் திருமணங்களை உறுதி செய்துகொள்ளவும்.
- ★ வணிக நோக்கமுடையவர்கள் - இடைத்தரகர்கள் எந்த நிலையிலும் மணக்கோலம் பகுதியைப் பயன்படுத்தி பணம் வசூலிப்பதோ - நகல் எடுத்து விற்பதோ - வேறு வழிகளில் பயன்படுத்துவதோ கூடாது.
- ★ 24 மனை குலமுரசு இதழுக்கு தபால், மின்னஞ்சல் மற்றும் வாட்ஸ்அப் மூலமாக வரும் வரன் விபரங்களை நாங்கள் எவருடனும் பகிர்ந்து கொள்வதில்லை. வேறு தளங்களிலும் நாங்கள் வெளியிடுவதில்லை.

**M16 - ID 11863 - (EXP: MAR-2025) 04/24 (OFF)**
பெயர்: மோகன் பிறந்ததேதி:.07.1993
கல்வி:BE வருமானம்: 50,000/- நட்சத்திரம்:
தொடர்புக்கு:சிவாஜி, சென்னை. செல்:00000 00000

**M16 - ID 11864 - (EXP: MAR-2025) 04/24 (OFF)**
பெயர்: விஷ்ணுசங்கர் பிறந்ததேதி:.01.1994
கல்வி:BE வருமானம்: 1,20,000/- நட்சத்திரம்:
தொடர்புக்கு:காந்தி, சங்கரன்கோவில்.
செல்: 00000 00000

**M16 - ID 11463 (EXP:MAR-2025) - 04/24 (OFF)**
பெயர்: S.P.நாகராஜ் படிப்பு: B.A.,LLB
வருமானம்: 30000/Month
பிறந்ததேதி: .04.1997 செல்: 00000 00000
தொடர்புக்கு: புருசோத்தமன், சென்னை.

**M16 - ID 11503 (EXP:APR-2024) - 04/24 (WA)**
பெயர்: விஜயசாரதி எஸ். படிப்பு: B.Tech.
பணி: Software professional.வருமானம்:9-10 lakhs
குலம்: கணத்தியவர் பிறந்த நாள்: 05.1996.
நட்சத்திரம்: பூசம் செல்: 00000 00000
தொடர்புக்கு: செந்தில்வேல், கோவை.

**M16 - ID 11311 - (EXP:SEP-2024) - 04/24(WA)**
பெயர்: S.அழகுராஜ் படிப்பு:B.E (CS)
பணி: Software Programmar, Pondichery
வருமானம்: 80,000/Month நட்சத்திரம்: சதயம்
பிறந்த தேதி:.8.1994 தொடர்புக்கு: G.ராஜேஷ், மம்சாபுரம். செல்: 00000 00000, 00000 00000

**M16 - ID 11518 (EXP:MAR-2024) - 10/23 (WA)**
பெயர்: N.தினேஷ்குமார் படிப்பு: BCA
பணி: Working in THE HINDU குலம்: தரிசியவர்
வருமானம்: 80,000/மாதம் பிறந்ததேதி: 12.1993
நட்சத்திரம்: திருவோணம் (ராகு,கேது உண்டு)
தொடர்புக்கு: நாராயணன், சென்னை.
செல்: 00000 00000, 00000 00000

**M16 - ID 6445- (EXP:JUN-2024) - 04/24(WA)**
பெயர்: M. மதிவாணன் பிறந்தநாள்: 02.1990 குலம்: தரிசியவர் படிப்பு: B.Com.CA.MIB.
பணி: HR MANAGER குலம்: தரிசியவர்
நட்சத்திரம்: அஸ்தம் (ராகு, கேது)
தொடர்புக்கு: M.V.மகேந்திரன், பொள்ளாச்சி.
செல்: 00000 00000

**M16 - ID 8564 - (EXP:SEP-2024) - 04/24(WA)**
பெயர்: N.சஞ்சய்குமார் படிப்பு: M.Tech.,MS.,
பணி: Software Engineer பிறந்தநாள்: 06.1999
வருமானம்: ரூ.9 Lakhs/Year குலம்: நலிவிதியர்
நட்சத்திரம்: உத்திரட்டாதி 2ம் பாதம்
தொடர்புக்கு: N.நவநீதகிருஷ்ணன், சென்னை.
செல்: 00000 00000, 00000 00000

இந்த மின்னிதழில் உள்ள வரன் விபரங்களில் செல் எண்கள் காட்டப்படாது.
தனிநபர் பிரைவஸியை வேறு எவரும் தவறாகப் பயன்படுத்திவிடக்கூடாது என்பதற்காக நீக்கப்பட்டுள்ளது.
அச்சிடப்பட்ட இதழில் செல் எண்கள் உள்ளன. சந்தாதாரர்கள் அதனைப் பயன்படுத்திக் கொள்ளவும்.

வரன் பற்றிய தகவல்கள் 3 மாதம் வெளியிடப்படும். அடுத்த 3 மாதங்கள் வெளிவர குலமுரசு எண்ணிற்கு 9965 900 990 அழைத்து தகவல் தெரிவிக்கவேண்டும்.



# மணக்கோலம் தந்த மணக்கோலம்



**மணமக்கள்:**

**K.C.நவீன்** B.E.,
மணக்கோலம் பதிவு எண்: **M8 - ID 5142**

**G.வனிதாதேவி** B.E.,MBA.,
மணக்கோலம் பதிவு எண்: **F16 - ID 10772**

இவர்களது திருமணம் 19-02-2024 திங்கட்கிழமை அன்று சென்னை, பூவிருந்தவல்லி, ருக்மணி நகர் ராணி திருமண மண்டபத்தில் நடைபெற்றது.

மணமக்களுக்கு குலமுரசின் சார்பில் வாழ்த்துகளைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

**மணமக்கள்:**

**R.அகிலா** B.E.,(ECE).,
மணக்கோலம் பதிவு எண்: **F16 - ID 9965**

**J.மகேஸ்வர்** B.E.,(Mech)

இவர்களது திருமணம் 22-02-2024 வியாழக்கிழமை அன்று திருச்சி, குமார வயலூர் அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயிலில் நடைபெற்றது.

மணமக்களுக்கு குலமுரசின் சார்பில் வாழ்த்துகளைத் தெரிவித்துக் கொள்கிறோம்.



**GR16- ID 10502 (EXP: JAN-2025) - 04/24 (OFF)**

பெயர்: D.விக்னேஷ் படிப்பு: B.E.,
பணி: TCS, Chennai வருமானம்: 1.30 லட்சம்/மாதம்
பிறந்த நாள்: 12.1991 நட்சத்திரம்: பரணி
குலம்: மும்முடியர் செல்: 00000 00000
தொடர்புக்கு: துரைராஜ், சென்னை.

**M16 - ID 8925 (EXP:NOV-2024) - 04/24 (WA)**

பெயர் : R.ஸ்ரீவத்சன் படிப்பு : B.E.,
பணி: IT., London, UK பிறந்த தேதி: 11.1990
நட்சத்திரம்: பரணி குலம்: ராஜபைரவர்
தொடர்புக்கு: ராஜேந்திரன், பழனி.
செல்: 00000 00000

**M16 - ID 9569 (EXP:SEP-2024) - 04/24 (OFF)**

பெயர்: கோபிநாத் படிப்பு: BE MBA.,
பணி: System Engineer, Czech Republic, Europe
நட்சத்திரம்: சதயம் வருமானம்: 4 லட்சம்/மாதம்
பிறந்த தேதி: 5.94 செல்: 00000 00000
குலம்:மும்முடியர் தொடர்புக்கு: ராஜா, சென்னை.

**M16- ID 10888 - (EXP:MAR-2025) - 04/25(WA)**

பெயர் : S.ஸ்ரீநாத் படிப்பு: B.Tech.,IT
பணி: Senior Test Engineer, Core Solutions,Chennai
வருமானம்: 9 Lakhs/Year பிறந்த நாள்: .11.1992
நட்சத்திரம்: உத்திரட்டாதி குலம்: வம்மையர்
தொடர்புக்கு: K.சண்முகம், திருச்செங்கோடு.
செல்: 00000 00000

